பராவித்யா வழங்கும்

# தன்னை அறியும்
# தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## அநுபந்த சதுஷ்டயம்

1




சுவாமி பிரபஞ்சநாதன்

பராவித்யா வழங்கும்

# தன்னை அறியும்

# தமிழ் வழி

# வேதாந்த பாடங்கள்

## அநுபந்த

## சதுஷ்டயம்

ஸ்ரீ குருப்யோ நம:

ஓம் ஸ்ரீ பரமாத்மனே நமஹ

**தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்**

**அந்தமிலா இன்பநமக் காவானும் - எந்தம் உயிர்**

**தான் ஆகுவானும் சரணாகுவானும் அருட்**

**கோனாகுவானுங் குரு.**



**நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து**

**நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்கள்**

**எல்லா உயிர்க்கும் இறைவனே ஆயினும்**

**கல்லார் நெஞ்சத்து காண ஒண்ணாதே.**

# தன்னை அறியும்

# தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## (அநுபந்த சதுஷ்டயம்)

உலகத்தில் உள்ள அனைத்து விதமான பிரச்சனைகளுக்கும், துயரத்திற்கும் மூல காரணம் என்பதே அறியாமைதான் (ignorance) என்பதை ஒருவன் தெரிந்துக் கொண்டு விட்டால் மட்டும் போதும். பிரச்சனைகளுக்கும், துயரத்திற்கும் இனி இடமே இல்லை.

ஒரு மருத்துவரிடம் சென்று நமது நோயை பற்றி நாம் கூறினால், முதலில் அந்த மருத்துவர், 'இந்த நோய் எதனால் வந்தது? இந்த பிரச்சனைக்கும், துயரத்திற்கும் காரணம் என்னென்ன?' என்றுதான் முதலில் கவனிப்பார். அதன் பிறகுதான் சிகிச்சையை ஆரம்பிப்பார்.

அந்த சிகிச்சையின் காரணமாக, மருந்தினை தேர்ந்தெடுக்கின்ற பொழுது, இது இந்த வகையைச் சார்ந்த மருந்து என்றும், இந்த நோயிற்கான மருந்து என்றும், இந்த மருந்தைக் கொடுக்க வேண்டியவர்கள் இத்தகைய நோயை உடையவர்களாக இருக்க வேண்டும் என்பதை, அவர் நன்கு அறிந்து வைத்துக் கொண்டு இருப்பார்.

அதன் அடிப்படையிலே, மருந்தினை அவர் கொடுக்க விரும்பினால், இந்த நோய்க்கு இந்த மருந்தைக் கொடுக்க வேண்டும் என்று தீர்மானித்து, தன்னிடம் வந்துள்ள நோயாளியின் நோயின் தன்மைக்கு ஏற்றவாறு, மருந்தினை அவர் சரியாகத் தேர்ந்தெடுத்து, வந்துள்ள அந்த நோய்க்கு கொடுப்பார்.

அதுபோன்று, மனிதனிடையே காணப்படுகின்ற பல்வேறு பிரச்சனைகளுக்கும், துயரத்திற்கும் காரணம் என்னென்ன?

அது எதனால் வந்தது? என்று ஆராய்ந்து, அறிந்து கொண்ட ஒருவரால்தான் அதற்கான சரியான தீர்வைக் கொடுக்க முடியும்.

எவ்வாறு, ஒருவருக்கு வந்துள்ள நோய்க்கு இதுதான் மருந்து என்று சரியாகத் தேர்ந்தெடுத்து கொடுக்கும் பொழுது, அந்த நோய் முற்றிலும் அந்த நோயாளிக்கு குணமாகி, அந்த நோயிலிருந்து விடுதலை உண்டாகின்றது.

அதுப்போல, தற்போதைய மனிதனின் பிரச்சனைகளுக்கும், துயரத்திற்கும் சரியான காரணத்தைக் கண்டறிந்து, அதற்குச் சரியான சாஸ்திர உபதேசத்தை உண்மையில் கொடுத்தால் மட்டுமே, மனிதன் தன்னுடைய பிரச்சனைகளில் இருந்தும், துயரங்களில் இருந்தும் முழுமையாக விடுதலையை அடைந்திட முடியும்.

**'நாம் இருக்கின்றோம்'** அல்லது **'நான் இருக்கின்றேன்'** என்பதில் யாருக்கும் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால், நான் எப்படி இருக்கின்றேன் என்பதில்தான் பெரும்பாலானவர்களுக்கு பெரும் குழப்பமே உள்ளது.

நான் இன்னாருக்கு மகனாக/மகளாக இருக்கின்றேனா?

இன்னாருக்கு கணவனாக/மனைவியாக இருக்கின்றேனா?

இன்னாருக்கு தந்தையாக/தாயாக இருக்கின்றேனா?

இன்னாருக்கு சகோதரனாக/சகோதரியாக இருக்கின்றேனா?

இல்லை, இந்த உடம்பாக இருக்கின்றேனா?, மனமாக இருக்கின்றேனா?, புத்தியாக இருக்கின்றேனா? அல்லது **'நான்'**, **'நான்,** என்ற அஹங்காரமாக இருக்கின்றேனா?

இதில், **நான் யார்?** என்பதில் ஏகப்பட்ட குழப்பங்கள் என்னிடத்திலே இருக்கின்றது என்பதை என்று ஒருவன் அறிய முற்படுகின்றானோ, அவன் மட்டுமே அறிவை ஆராயும் ஆர்வம் கொண்டவனாக இருக்கின்றான்.

பொதுவாக, நான் **'இந்த உடம்பு'** என்று மட்டுமே அனைவரும் நினைக்கின்றோம்.

யாராவது நம்மை திட்டினால், நம்மால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. அதுவே, நம்மை யாராவது, புகழ்ந்தால், நம்முடைய மனம் மிகவும் சந்தோஷத்தை அடைகின்றது. உடனே, நாம் கர்வத்தோடு புகழ்பவரைப் பார்க்கின்றோம். அதுவே, நம்மைத் திட்டி விட்டாலோ, மிகுந்த கோபத்தோடு திட்டியவரை எதிர்க்கின்றோம்.

இவ்வுலகிலே ஏராளமான விஷயங்கள் நம்மிடையே புத்தியாக மனதில் ஏற்றிவைக்கப்பட்டுள்ளது. அதிலே, நிறைய ஜடமான பொருள்கள் மற்றும் உயிருள்ள உடல்கள் என ஏகப்பட்டவைகள் இருக்கின்றன.

இவைகளிலே, நாம் ஏற்றி வைத்துக் கொண்ட அறிவின் அடிப்படையில், ஒன்றை மற்றொன்றோடு ஒப்பிட்டுப் பார்க்க ஆரம்பிக்கின்றோம். இதைத்தான் **'தார தம்யம்'** என்று பெரியவர்கள் கூறுகின்றார்கள்.

இப்படி **'ஒப்பீடு'** செய்வதின் காரணமாகத்தான், நம்முடைய மனதில் ஒன்றை விட மற்றொன்றை சிறந்ததாக நினைத்துக் கொண்டு, அந்த சிறந்த ஒன்றின் மீது, நமக்கு ஆசை உண்டாகின்றது.

இவ்வாறு, ஆசை உண்டாகி விட்டவுடன், அந்த ஆசையின் காரணமாக, அதை அடைய நினைக்கின்றோம். அதற்கான செயலில் உடனடியாக களம் இறங்கி காரியங்களை மேற்கொள்கின்றோம்.

அந்த காரியங்களினால் வருகின்ற நன்மை, தீமைகளின் அடிப்படையில் மட்டுமே நமக்கு பிரச்சனைகள் உண்டாகின்றன. அந்த பிரச்சனைகளின் மூலமாக துயரங்கள் உண்டாகின்றன.

இவ்வாறு, செய்த செயல்களினால் விளைந்த, இவனது செயல் விளைவுகளுக்கு ஏற்றவாறு, நன்மை, தீமைகளின் அடிப்படையில் இவனுக்கு துயரங்கள் உண்டாகின்றனவே அன்றி, வேறு எதன் அடிப்படையிலும் இவனுக்கு இன்ப, துன்பங்கள் ஏற்படுவதில்லை.

அதாவது, *தீதும், நன்றும் பிறர் தர வாரா!*

அதற்குக் காரணம், அவனவன் செய்த செயல் விளைவுகளின் அடிப்படையில் மட்டுமே, அவர்களுக்கு சந்தோஷமும், துயரமும் உண்டாகின்றது.

*வினை விதைத்தவன் வினை அறுப்பான்!*
*தினை விதைத்தவன் தினை அறுப்பான்!* என்பது முதுமொழி.

ஆகவே, நாம் தேங்காய் விதையை மண்ணில் விதைத்து விட்டு, அந்த மண்ணிலே மாங்காயை அறுவடைக்கு எதிர்ப்பார்த்தால், எப்படி மூடத்தனமாக இருக்குமோ, அதுப்போன்று, செய்கின்ற செயல்களிலே தவறானவைகளை மட்டுமே செய்துவிட்டு, நன்மைகள் மட்டும் நமக்கு உண்டாக வேண்டும் என்று எதிர்ப்பார்ப்பதும் மூடத்தனமானது என்றே கூற வேண்டும்.

ஆகவே, நாம் கற்றுக் கொண்ட அறிவு என்று, ஏகப்பட்ட தவறான அறிவை நாம் நம்முடைய புத்தியிலே ஏற்றி வைத்துக்

கொண்டு, நம் உள்ளே இருக்கின்ற உண்மை அறிவை அறிய முடியாத அறியாமையில் இருக்கின்றோம்.

இந்த அறியாமையை நீக்கும் அரிதான நூல்களின் வரிசையில், நாம் எற்கனவே கற்று முடித்த **'கைவல்ய நவநீதம்'** என்ற ஒன்றைத் தவிர, மற்ற நாம் காண இருக்கின்ற சில **தமிழ் நூல்கள்** பின்வருமாறு,

1. **நாநாசீவ வாதக் கட்டளை**
   (சேஷாத்திரி சிவனார் இயற்றியது)

2. **கீதாசாரத் தாலாட்டு**
   (திருவேங்கட நாதர் இயற்றியது)

3. **சசிவன்ன போதம்**
   (எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

4. **மகாராஜத் துறவு**
   (விருத்தாசலம் குமாரதேவர் இயற்றியது)

5. **வைராக்கிய சதகம்**
   (பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

6. **வைராக்கிய தீபம்**
   (பேருர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

7. **இலட்சணா விருத்தி**
   (சிதம்பர ஞான தேசிகர் இயற்றியது)

8. **அஞ்ஞவதைப் பரணி**
   (எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

# அனுபந்த சதுஷ்டயம்

'அனுபந்த சதுஷ்டயம்' என்பது, ஒரு நூலைப் படிப்பதற்கான நான்கு வகைத் தொடர்புகளை குறிப்பிடுகின்றது.

அவைகள்,

1. அந்த நூலைப் படிக்கத்தகுதியானவர் யார்?
2. அந்த நூலில் உள்ள விசயம் என்ன?
3. அந்த நூல் எதன் சம்பந்தமாக இருக்கின்றது?
4. அந்த நூலைப் படிப்பதினால் உண்டாகும் பயன் என்ன?

இவ்வாறு, ஒரு நூலைப் படிக்கின்றவர்கள் இந்த நான்கு தொடர்புகளைப் பற்றி அறிந்துக் கொள்வது மிகவும் அவசியம்.

அந்த வகையில்,

1. **அதிகாரி**, 2. **விசயம்**, 3. **சம்பந்தம்**, 4. **பிரயோஜனம்** என்ற இந்த நான்கு தொடர்புகளையும் **"அநுபந்த சதுஷ்டயம்"** என்று கூறப்படுகின்றது.

## 1. <u>அதிகாரி:-</u>

*அந்த நூலைப் படிக்க விரும்புகின்ற தகுதியான **அதிகாரி (சாதகன்)** யார்?*

நான்கு வகையான தகுதிகளை உடையவன்தான் **அந்த நூலைப்படிப்பதற்கு** முழு தகுதியுடையவன் ஆகின்றான்.

அதாவது, நம் புத்தியானது, யுக்தி பூர்வமாக சிந்திக்கும் திறன் கொண்டதாக இருத்தல் வேண்டும். எந்த ஒரு இலக்கை நாம் அடைய வேண்டும் என்று விரும்புகின்றோமோ, அதற்கு, நான்கு விசயத்தில் தெளிவாக இருக்க வேண்டும்.

அவைகள்:

1. அடைய நினைக்கும் இலக்கில் உறுதியாகவும், தெளிவாகவும் இருக்க வேண்டும்.

2. அதை அடைய உதவும் வழி முறைகளுக்கும், இலக்கிற்கும் இடையே உள்ள உறவை நன்கு புரிந்து வைத்திருக்க வேண்டும்.

3. இலக்கை அடையும் வழிமுறைகள் தெரிய வேண்டும்.

4. அந்த இலக்கை அடைவதற்குத் தேவையான தகுதிகள் தன்னிடம் இருக்கின்றதா என்றும் தெரிந்து இருக்க வேண்டும்.

இத்தகைய அதிகாரிகளில் இரண்டு விதமானவர்களாக காணப் படுகின்றனர். அவர்கள் முறையே, **மேதாவி** மற்றும் **வித்வான்** எனப்படுகின்றனர்.

## மேதாவி

கூறப்படுகின்ற விசயங்களை சரியாக கிரகித்துக் கொள்ளக் கூடிய திறனுடையவர், அவைகளைச் சரியாகக் கூர்ந்து கவனிக்கும் ஆற்றலுடையவர், மேலும், கேட்டவைகளை சரியான நடைமுறையில் பயன்படுத்தி, அதற்கேற்றவாறு வாழ்கின்றவர். இவரை **'மேதாவி'** என்று அழைக்கின்றோம்.

## வித்வான்

நடைமுறை மார்க்கங்களான கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் ஆகியவற்றில் ஈடுபாட்டுடன் கூடிய அறிவுடையவர், யுக்தி பூர்வமாக சிந்திக்கும் திறனுடையவர்.

இவரே, அந்த நூலில் கூறப்படுகின்ற உபதேசங்களை மிகத் தெளிவாகவும், சற்று விரைவாகவும் புரிந்துக் கொண்டு, அதைத் தன் வாழ்க்கையில் எளிதாக நடைமுறைப்படுத்தத் தகுதியானவர். இது, எல்லோராலும் ஒருமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

## 2. விசயம்:-

*அந்த நூலில் கூறப்பட்டுள்ள விசயம் என்ன?*

அந்த நூலின் வாயிலாக *ஜீவ, பிரம்ம ஐக்கியம்* உபதேசிக்கப் படுகின்றது. இங்கு ஐக்கியம் என்பது **'ஒன்று சேர்தல்'**, அல்லது **'இணைதல்'** என்று பொருள்.

ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்பதை எதன் அடிப்படையில் கூறப்படுகின்றது எனில், **"தத் துவம் அஸி"** என்ற மகாவாக்கியத்தின் படி, **'நீ அதுவாகவே இருக்கின்றாய்'** என்பதை அந்த புத்தகத்தின் வாயிலாக யுக்திக்கு பொருந்தக் கூடிய அறிவுப் பூர்வமாகவும், சாஸ்திர உவமானங்களின் வாயிலாகவும் விளக்கப்படுகின்றது.

மேலும், ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்று அறிந்துக் கொள்வதினால் எனக்கு என்ன வரப்போகின்றது எனில், தன்னைப் பற்றிய உண்மையான அறிவு உண்டாகி, அதன் வாயிலாக **நான் யார்?** என்ற விசாரத்தின் பலனாக கிடைத்த **"உண்மை ஞானம்"** தன்னை

ஜீவன் முக்தனாக மாற்றி நிலையான ஆனந்தத்தில் நிலைத்திருக்கச் செய்கின்றது.

அதாவது, தன்னைப் பற்றிய உண்மையை, **நான் யார்?** என்று விசாரித்து அறியும் போது, மனதின் அறியாமைகள் அகன்று, தன்னுடைய **உண்மை சொரூபம்** வெளிப்படுகின்றது.

தன்னைப் பற்றிய ஞானம் உண்டாவதற்கும், தன் உண்மை சொரூபத்தினை உணர்வதற்கும் கண்கள், காதுகள், மூக்கு போன்ற, எந்தவித புறக் கரணங்களின் உதவியோ, அல்லது மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற அந்தக் கரணங்களின் உதவியோ இன்றி, இயல்பிலேயே, **'அதுவாகவே நான் இருக்கின்றேன்'** என்று, தன் உண்மை சொரூபத்தில் இருக்கின்றதை, அந்த நூலின் வாயிலாக அறிந்து, அதை அனுபவமாக நடைமுறையில் கொண்டு வருவதற்குத் தேவையான, நடைமுறை சாதனங்களையும், விளக்கங்களையும், அந்த நூல்களிலே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

## 3. சம்பந்தம்:-

ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்று அறிவது மட்டும்தான் என்னுடைய முடிவான குறிக்கோள் எனில், அதனால் நான் அடைகின்ற துயரங்களில் இருந்து விடுதலை என்ற, நிலையான ஆனந்தமே **"மோக்ஷம்"** என்ற சுகத்தைக் கொடுக்கும் பொழுது, அதை அடைவதற்கு நான் ஏன் அந்த நூல்களைக் கற்க வேண்டும்? என்ற கேள்வி எழுந்தால், ஒரு மனிதன் தனக்கு உண்டாகின்ற துயரங்களுக்கு காரணமாக இருக்கின்ற அனேக பிரச்சனைகளைக் கண்டறியக்கூடிய, அரிய உண்மையை அறிய வைப்பதற்கான ஒரே ஒரு **'பிரமாணம்'** அந்த நூல்கள் மட்டுமே எனலாம்.

அதாவது, கண்ணாடியில் தெரியும் நம் பிம்பம் சரியாகத் தெரிய வேண்டும் என்றால், கண்ணாடியில் உள்ள அழுக்கை நன்கு துடைத்து நீக்க வேண்டும். அல்லது அழுக்கு இல்லாத சுத்தமான கண்ணாடியில், காண்கின்ற பிம்பம் மிகச் சரியாகத் தெரியவில்லை என்றால், நம் கண்களைத்தான் சரி செய்ய வேண்டுமே தவிர, அந்த பிம்பத்தை ஒன்றும் செய்யத் தேவை இல்லை.

அதுப்போல, என்னை அறிவதற்கு, எனக்கு வேறாக இருக்கின்ற விசய, சுகங்களை விரும்பாமல், திரும்பத் திரும்ப வேதாந்தத்தை உபதேசிக்கும் இதுப்போன்ற உன்னதமான நூல்களை படிப்பதினாலும், வெளியே அலைகின்ற மனதை உள்ளே திருப்பி, மனதை விசாரம் மேற்கொள்வதினாலும் மட்டுமே, தன்னை அறிய முடியும். இதைத் தவிர, வேறு எந்த வழியும் இல்லை.

படிப்பவனுக்கும், படிக்கப்படும் விசயத்திற்கும் **நேரடி சம்பந்தம்** இருக்கின்றது. அறிவு (ஞானம்) அடையும் வரையும், விசாரத்தை மேற்கொண்டவாறு, இதுப்போன்ற வேதாந்த நூல்களை தொடர்ந்து படித்துக் கொண்டிருக்க வேண்டும்.

## 4. பிரயோஜனம்:-

எந்த ஒரு படிப்பும் அதற்கேற்ற அறிவைக் கொடுக்கும். அதுப்போல, அந்த நூலைப் படிப்பதினால், பரமப் பிரயோஜனம், மற்றும் அவாந்தரப் பிரயோஜனம் என்ற இரண்டு பயன்கள் உண்டாகின்றன.

அதாவது, சகல ஜீவர்களின் பிரியத்திற்கும், எது எப்போதும் விஷயமாக இருக்கின்றதோ, அது பரமப் பிரயோஜனமாகும். அந்த பரமப் பிரயோஜனம் எதன் வாயிலாக அடையப்படுகின்றதோ, அது அவாந்தரப் பிரயோஜனம் ஆகும்.

அந்த வகையிலே, துயரங்கள் நீங்கி சந்தோஷம் உண்டாவதை "மோக்ஷம்" என்ற பரமப் பிரயோஜனமாகவும், "ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானம்" அவாந்தரப் பிரயோஜனமாகவும் உள்ளது.

இதை எப்படிப் புரிந்துக் கொள்ளலாம் எனில், வாழைக் கன்று நட்டு வைத்தவனுக்கு, அந்த மரத்தின் வாழைப்பழங்கள் பரமப் பிரயோஜனமாகவும், தண்டு, இலைப் போன்றவைகள் அவாந்தரப் பிரயோஜனமாகவும் உள்ளதைப் போன்று, நம்முடைய நோக்கம் நிலையான சந்தோஷம் என்ற பரமப் பிரயோஜனமாகிய மோக்ஷம் மட்டுமே, இருப்பினும் இலவச இணைப்பாக நமக்கு, நம்மைப் பற்றிய ஜீவ, பிரம்ம ஐக்கிய ஞானம் அவாந்தர பிரயோஜனமாக கூடுதலாகக் கிடைக்கின்றது.

ஆக, இந்த ஞானத்தினால் என்ன கிடைக்கும் என்றால், பிறப்பு, இறப்பு என்ற சம்சார பந்தத்திலிருந்து நம்மை விடுவித்து, நிலையான ஆனந்தத்தைத் தருகின்ற, இந்த உடலுடன் வாழுகின்ற பொழுதே அடையக்கூடிய '**ஜீவன் முக்தி**' நிலை உண்டாகின்றது.

அந்த நூல்களைப் படிப்பதினால், அனேக பிறவிகளின் வாயிலாக உண்டான, (அஞ்ஞானம்) அறியாமை என்னும் இருள் நீங்கி, இந்த **உலகம், ஜீவன், ஈஸ்வரன்** என்பதின் உண்மைத் தன்மையை அறிந்துக்கொண்ட அந்த மெய்ஞானமே, என்னுடைய உண்மை சொரூபமான "அறிவு" என்று அறிந்து அழியக்கூடிய இந்த உடலோடு வாழும் காலம் வரையிலும், ஜீவன் முக்தனாக வாழ்ந்து, உடலை விட்டவுடன், என்றும் அழியாத பரமா(ஆ)ன்மாவாக விதேக முக்தியை அடைந்திட முடியும்.

இவைகளே, அந்த நூல்களைப் படிப்பதினால் உண்டாகின்ற பிரயோஜனம் (பலன்கள்) எனலாம்.

**ஆனந்தமே மோக்ஷம்! ஐக்கியமே ஞானம்!**

பராவித்யா வழங்கும்

# தன்னை அறியும்
# தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## அநுபந்த சதுஷ்டயம்




1

சுவாமி பிரபஞ்சநாதன்